உ
திருச்சிற்றம்பலம்

# திருமெய்ஞ்ஞானப் பயன்

## காப்பு

தற்போ தகத்தை தவிர்போ தகக்குருளை
தற்போ தகத்தைத் தரும்.

## 1. இறைநிலை விளக்கம்

1. அவ்வுயிர்பண்ணென்று பொரு ளைந்திவைபோ னிற்கு நிறைந்
தெவ்வுயிரின் கண்ணு மிறை.

2. அருளே யறிவா யருளருட்பால் முற்பிற்
பொருளே பொருளாம் பொருள்.

3. இருளிலர் தந்துன்பாயிருளுடையோர்க் கின்பா
யருள் முதல்வன் பேர் சம்பு வாம்.

4. நிறைவறிவில் நிற்றலருள் நீள் பருவத்திற்கு
மிறைபிறிது நேரொன் றிலான்.

5. ஆயசட சித்தின்க ணறாமல ரொன்றாகி
தீயினுநீர் போலவாங் தேர்.

6. முற்றுலகங் கண்டளித்து மொய்யிருளிற் கட்டதற்கு
பற்றறுமெய்ப் பற்றாம் பரம்.

7. அருவுருவ னிச்சைக் கருட்போதற் குண்மை
யுருவறிவாய் நின்றிங் குளன்.

8. ஈரறிவி லோரறிவு போலுணர்த்து மெம்மிறைமே
லோரொருவ ரில்லாதவன்.

9. ஓதுமுதன் முடிவு நாப்பொணாழி வுண்மையர்க்குப்
போதமிவை யுள்ளார்க்குப் பொய்.

10. இன்மைவிழிச் சேயைவிடா யாய்நிகர்ப்ப தெவ்வுயிர்க்கும்
சென்மமருந் தாகுஞ் சிவம்.

## 2. போதநிலை விளக்கம்

11. எப்பகுதி யும்பிறிவி லீசனள வின்மை தனக்
கொப்புயிர்க ளாமென் றுணர்.

12. என்று முயிர் மூவகைய தெண்ணிலிகள் எண்ணிலிவர்
ஒன்றிரண்டு மூன்றுமலத் தோர்.

13. ஏகமலர்க் குண்மை யிருமலர்க்குத் தெய்விகமூன்
றாகுமலர்க் கொப்பா யருள்.

14. ஓதலரு முச்சுவனத் துன்னல சொல் வின்னலறு
போதநிலைக் கேதோ பொருள்.

15. ஒற்றசட மன்றியுமட் டொன்றறியான் போதமெனச்
சொற்றபெயர் பெற்றது போ தும்.

16. தன்னா லுலகந் தழைத்திடவுந் தன்னிலியை
என்னாகச் சொல்வ தினி.

17. ஆங்கறிவு மற்றை யறியாமை தன்னிலியா
லீங்கிவையுண் டாத லிவன்.

18. அல்ல தனி னல்லொளியீ லவ்வொளிகண் விண்ணுயிரும்
புல்லுபொரு ளாகுமது போல்.

19. ஏகவுயிர் மூலியிழப் பின்மைநிலை யென்றொளியிற்
கூகைவிழி போலே குறி.

20. ஆற்றவொணா வேழ்பிறப்பி லாவியருள் போற்றிதற்குத்
தோற்றுவதெக் காலக் துயர்.

## 3. தம நிலை விளக்கம்

21. அல்லறரு முற்பவமு மானந்த மெய்த்துணையு
மில்லைமல மென்பாரு மில்.

22. அருளின்மை யேயிருளென் றாய்வரறிந் தோரன்
றருளின்மை தானே யிருள்.

23. என்றுமிரு டற்காட்டி யாவையுமுற் காட்டியிடா
தொன்றுமிது காட்டா துணர்.

24. கண்ணிருண்மற் றெல்லா மறைக்குமுயிர்க் கண்ணிருளைக்
கண்ணில்மறைப் புற்றிருக்குக் காண்.

25. பொய்யவத்தை மெய்யவத்தை போதமரு ளின்பயிலா
மையற மாரசன்றன் மை.

26. புல்லாத பூரணமும் போதவொழி வும்பொருளு
மெல்லா மிருளே யிருள்.

27. விழிப்பிமைப்பி னீங்கா விழியிருள்போ லுண்மை
யிழிப்பிரண்டுந் தானா மிருள்.

28. கழியிருளாம் பொய்க்கணிகை கோதகக்கற் பென்னுங்
கொழுனரெதிர் நில்லாக் குணம்.

29. நனிமலர் தோ டோய்ந்துமிரு ணாரிக்கோர் கற்புண்
டனுமான மவ்வவாமாண் டால்.

30. மூலவிருள் மாயைவினை மீட்சியினின் மூட்சிய றல்
காலல்மிளி ராவொளியே காண்.

## 3. அருணிலை விளக்கம்

31. மாசிலருட் குன்பால திச்சைமல போகந்துன்
னாசைவரம் பற்றது போலாம்.

32. கூட்டமிலா வேழ்பிறப்புன் கோட்பாடுன் னிந்திரிய
...... லாம் பாத்தா லருள்.

33. உற்றவுடல் சற்றறியா வாவினை யொன்றறியா
மற்றதறி வாரார் மதி.

34. நாவியிழப் புற்றமணம் நன்மணியே நல்லருளை
யாவியி வாதிழத்த லாம்.

35. பாலிழந்து புற்றின் பசுவே பசுக்களருட்
பாலிழந்து வாழும் பயன்.

36. ஆயா தணை கருவி யாவியிழப் பாமுயிர்த்த
றாயாவும் போதமழித் தல்.

37. ஏயுமரு ணின் றிழத்த லின்பாற் கலமிதித்து
நாய்சுத்த நாடு நலம்.

38. மண்ணிழந்து மண்ணுழல்வோர் மானுமருட் கண்ணிலையிற்
கண்ணிழந்து வாழ்வோர் கடன்.

39. சானுவியில் வாழ்தருமற் சங்கங்களுக் கங்கைநலம்
போன தருளாவியிழப் பும்.

40. எற்றுதிரைக் கீரவா ரீசமலி மீனருளை
யுற்றுமில தாம்வேற்றுயிர்.

## 4. குருநிலை விளக்கம்

41. ஆனோய்க்குப் பால்புறமுற் றானுறமுன் னேகவரு
டானோக்க வந்துளமா தல்.

42. நட்ட நடித்திலனே னட்டமுனக் கின்றுவணங்
கட்டவிடங் கெட்டது வோ காண்.

43. ஓவரிய வின்பனுரு வொத்திட் டுயிர்கவரும்
தீவகமே யாகுமெனத் தேர்.

44. கட்டிடுவன் மும்மலம்வீ யாமைகய மீன்கணம்போற்
றொட்டுநினை வற்றும்விழித்தும்.

45. அன்புருவோன் வந்திலனே லாவியருட் போறெங்கே
யின்பமுதல் வாழ்முதலெங் கே.

46. மெய்க்குருநோக் கன்றியின் மெய் மேவுமெனின் மேவு நிறை
பக்குவைக்குத் தானேயின் பம்.

47. நின்னுறுநோய் நின்னுரியோ ருள்ளலி னேசமுத
லுன்னிடர்கண் டானா னுரு.

48. கொல்லல்செயா வேற்றாவை கொல்லுவண மொன்றொன்று
கொல்லாவை கோல்பருந் தாகும்.

49. ஒன்றெனது ணின்றே யுருவிளைத்த தொன் றுருவந்
தன்றனுரு வீட்டுவித்த தன்று.

50. சேடனரு ளொப்புருவஞ் செய்கிணற்றில் வீழ்வளவிற்
கூடவிழுந் தாயிற் குணம்.

## 5. உணர்நிலை விளக்கம்

51. ஒன்றுமிலானொன்றுமிலா னூழிருள் பொய் மெய்மாயை
யென்றிவைக ளாறாதி யில்.

52. இருவினையொப் பின்கணிரு ளிருளே யாகும்
பொருள் வினையில் யாவும் பொருள்.

53. பன்மை நிற்கற்குப் பருதிமுதல் போலுயிரின்
றன்மைசிவ மாகத் தரும்.

54. தற்பணதி தன்முதறான் றற்பயனட் டந்தனது
சிற்பயனில் மெய்ப்பயனாக் தேர்.

55. புல்லா வருளிருள் போய் போதம் பொருளின்மை
யெல்லாஞ் சிவமா யிரு.

56. ஒன்றுநிலைக் கோரொழிவும் வேண்டா முயிரருளின்
நின்றநிலை யுண்டே நிலை.

57. மருளற் கியாவு மருளானாற் போல
வருளற் கியாவு மருள்

58. வினையும் வினை செய்வானு மெய்ப்பயனுங் கூட்டித்
தனையுமிழ வாததவன் றாள்.

59. மருளிருள் மாமாயை மாயைவினை யாவி
யருளிவை யெல்லா மருள்.

60. அருவுற்ற நின்னுயிருக் காதாரி தன்னை
கருவிக்கு நிற்போலக் காண்.

## 7. தன்னுண்மை விளக்கம்

61. மருளுற்ற மூலவிருள் மாயை வினையாவு
மருளுக் கிலையென் றறி.

62. இருளுயிருக் குள்ள திருள் போல வென்று
மருளுயிருக் குள்ள தருள்.

63. ஆனவினை யாதிவினை யாகும் வினை மூன்று மருள்
ஞானவொளிக் கின்றென்று நாடு.

64. என்று மறியா திருணிறைவை யின்பவரு
ளென்று மறியா திருள்.

65. தீம்பாலும் வேம்பாகும் பித்திற் றெளிநாவிற்
றீம்பாலுண் டானவும்போற் றேர்.

66. வெய்யவர்கட் கண்மிளிர வெய்யோனைக் கண்ணிழக்கும்
பொய்யிழப்பிங் கெக்காலம் போம்.

67. எய்திடுமெய் யின்புபெறா வின்படிக் கன்றியிவன்
செய்தியெலாம் பூணுஞ் சிவம்.

68. வன்னங் கழல்படிகம் வாளிரவி மன்னமன்
மன்னுஞ் செயல்போன் மதி.

69. மாறா விடைகுறைய வைத்துவரும் பொற்குள் மாற்
றேறாது போலே யிரு.

70. மோதழனீர் வெம்மை முறைமுறைதோ றேகவதிற்
சீதளம்வா ராவரவைத் தேர்.

## 8. அனுபோக விளக்கம்

71. ஆனந்த மானந்த மாகியிரா வானந்திக்
கானந்த மானந்த மாம்.

72. மாறானும் வேறானும் வாடானும் நாடானும்
போறானும் தன் முத லின்பும்.

73. ஏகமெனி லத்துவித மின்றிரண்டே லத்துவிதம்
போகமிலொன் றன்றிரண்டும் பொய்.

74. ஒன்றிருமை யோரிரண்டு மொன்றிற்பா லொன்றுள தா
ஒன் றுனிலை யென்றே யுணர்.

75. மாருளத்து விதமற்........ துநீ யெய்தா
தருளத்து வித மறி.

76. திருந்தநிலை செப்பிற் சிவானந்த வுண்மை
யிருந்தபடி நீயென் றிரு.

77. ஒன்றலரு மொன்றற்ற வொன்றினிலை யோதிடினீ
நின்றதெலா மன்று நிலை.

78. நீடுசிவ மின்மையினீ நீடியபோ னின் றொழிவிற்
கூடலிலா வண்மையதா கும்.

79. உன்னையிறை யெய்திடனே யொண்பொருளை யெய்தலற
நின்னொழிவே மன்னிறைவாய் நில்.

80. ஆகசுக விழச்சில் ஆண்பெணழிந் தின்பமற
போனது போல் வாழும் பொருள்.

## 9. மந்திர விளக்கம்

81. நீட்டுமிருள் பாசவினை நேசவரு ளாவிவினை
பூட்டுமெழுத் தஞ்சென் றுணர்.

82. இல்லைமல மில்லைசிவ மில்லையரு ளில்லையுயிர்
இல்லையிரு ளென்று மிது.

83. அஞ்சுமற நின்றுவினை யாருமுயிர்க் கந்நிலையி
லஞ்சுமிலை யென்றே யறி.

84. நின்றநிலை யஞ்செழுத்தை நேசவருள் வந்துணர்த்தி
னின்றநிலை தானே நிலை.

85. பொய்விளைக்கு மஞ்சும் புரிபோதற் கந்நிலையே
மெய்விளைக்கு மஞ்சாம் விதி.

86. முன்னவன்மெய்ச் சத்தியுயிர் முத்தியிருண் மூலமல
மென்னுமிவை யஞ்செழுத்தி லே.

87. இல்லிரு ணீக்கியரு ளின்பமிக நடுவாய்
நில்லறிவா னந்தமுத னீ.

88. இந்நாளு நின்ற விருளிரிய வின்பமுதன்
முன்னாக நின்றே மொழி.

89. இன்புதைய மின்பதற் கின்மைசுகி சுகவீ
டன் பில்வள ரஞ்செழுத் தாம்.

90. உண்மையற நீயவிழ வுற்றசுகா தீதநிலை
யுண்மைநிலை யஞ்செழுத்தென் றுணர்.

## 10. விளைசிவர் விளக்கம்

91. உடலற் றுடலா யுழல்வோரை யொத்துக்
கடவுட் கடனாவர் காண்.

92. ஞாலமிரு பயன்மெய் நாடார்க்கு நேர்புனிற்று
பாலர் பிராந்தலகைப் பால்.

93. மங்குல் மறை மருத்தை மானுவரின் புண்டாகி
லங்கமல நேயமுத லாய்.

94. ஓதனதா கச்சொல்லொன் றொன்றிலறல் போல்வர் சுகா
தீதமுறு முண்மைச் சிவர்.

95. மெய்யறிவு மெய்ம்மையருண் மெய்ந்நிறைவஞ் சின்தயஞ்
சைவர்சிவா னந்தபூ சை

96. ஆனந்தன் பூசைசெய வானந்தி பூசைகொளல்
தானந்த ஞானார்ச் சனை.

97. இகம்பரமற் றெங்குநிறை வின் பிலவர் வீடே
யகம்புறமற் றொன்றா வது.

98. மெய்வகையி லின்புறுத லன்றிவிம லன்பணியா
மைவகையு மேவா ரவர்.

99. எப்பொருளு மெய்ப்பயனும் யாவுமகன் றொன்றா
அப்பொருட்கே யாவா ரவர்.

100. ஆளான வன்பினிறை யானந்த பூரணத்தின்
மீளார் புகுதார் விதி.

அதிகாரம் 10 - க்குக் குறள் 100.

**திருமெய்ஞ்ஞானப்பயன் முற்றும்**

திருச்சிற்றம்பலம்

[**குறிப்பு:** - இதுவரை அச்சிடப்பெறாத இந்நூல் நமது சமாஜ நிலையத்திலிருந்த கையெழுத்துப் பிரதியிலுள்ளபடி வெளிவந்துள்ளது. சிலவிடங்களிற் பாடம் தெளிவுபடவில்லை.]

சித்தாந்தம் - 1942 ௵ - அக்டோபர் மீ